# *Dasapradurbhavam*

AND

## *Some Pictorial Verses, Poems*

IN HONOR OF

*Their Maesties King George and Queen Mary*

*By*


**K. S. GOPALACHARIAR.**

*Senior Tamil Pandit Christian College Madras.*


SECOND EDITION



PUBLISHED

FOR

*Free Distribution*

BY THE

**Tamil Students**

MADRAS CHRISTIAN COLLEGE.


PRINTED AT THE MURAHARI PRESS.

MADRAS.

1912.

# முகவுரை.

"நாவிஷ்ணு: ப்ருதிவீபதி:" எனவும், "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" எனவும் கூறுகிறபடி, அரசன் காப்புக் கடவுளாகிய திருமாலின் அம்சமாதலின் அக்காவலன்பால் உயிர்களெல்லாம் பக்திகொண் டொழுகல் வேண்டும். ஆகவே, இறையவனம்சமாய் நம்மை ஆளாநின்ற ஐந்தாம் ஜியார்ஜ் சக்கரவர்த்தியின் மகுடாபிஷேக மஹோத்ஸவ ஸமயத்தில் அவருக்கு மங்கலவாழ்த்துக் கூறுதல் நமது கடமையாகும். ஆதலின், இச்சிறு நூல் அவரை வாழ்த்துவதாக எழுந்தது. "தசப்பிராதுர்ப்பவம்" என்பது பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் ஒன்றெனப்படும். அஃதாவது திருமாலின் பத்தவதாரங்களில் ஒவ்வோரவதார மூர்த்தியும் காக்கவென ஆசிரிய விருத்தத்தால் பத்துச் செய்யுள் ஒரு தலைவனைக் குறித்துப் பாடுவதாம். எனவே, இந்நூலினகண் முறையே மச்சாவதார முதலாகிய திருமால் நம ஜியார்ஜ் சக்கரவர்த்தியைக் காக்கவெனப் பாடியிருத்தல் காண்க. ஒவ்வொரு செய்யுளிலும் முன்னிரண்டடிகள் திருமாலின் அவதாரச் செய்தியையும், பின்னிரண்டடிகள் பாட்டுத்தலைவராகிய நம ஜியார்ஜ் சக்கரவர்த்தியின் குண விசயங்களையும் கூறுகிறதும். ஊன்றி நோக்குங்கால் அவதாரச் செய்திக்கும் ஜியார்ஜரசரின் குணவிசயத்திற்கும் உள்ள ஒற்றுமை நயமும் தோன்றும்.

இஃதன்றி, இதனோடு சில சித்திரகவிகளும் செய்யப்பட்டுள்ளன. அவை கமலபந்தமும் இரதபந்தமும் சக்கரபந்தமும் மகுடபந்தமும் ஸுதண்டபந்தமுமாம் (சுதண்டபந்தம்-செங்கோற்பந்தம்) மன்னர்க்குத் தோமுடி செங்கோல் முதலியவை உரிய அங்கங்களாதலின் அவ்வப்பந்தமாகச் செய்யுள் அமைக்கப் பெற்றது. சக்கரம்-ஆஞ்ஞா சக்கரமாம். இந்நூலைத் தாமரை வடிவாகப் பாவித்தலால் கமலபந்தமாகவும், முடிசூடிச் செங்கோல் கைக்கொண்டு தேரேறி ஆணை செலுத்தும் அரிய பெரிய மக

கலவைமயமாதலால் நம் அரசர்க்குத் தேருமாழியும் முடியுஞ் செங்கோலுமாகிய பந்தங்களாகவும் பாடியது இயைபுடைத் தென்பதுணர்க. இச்சித்திரகவிகள் இந்நால் அச்சிலிருக்கும்போதே இடம்பெற்றமையின் இவற்றிற்குச் சித்திரங்கள் செய்து அச்சிடப் போதிய அவகாசமில்லாமற் போயிற்று. ஆயினும், இவை தனித்தனி அழகிய படங்களாகத் தீட்டி வர்ணங் கொடுத்து நம் சக்கரவர்த்தியாரது நன்னோக்கிற்கு அனுப்பப் பெறும்.

இச்சிறு நூலையும் பந்தங்களையும் நமது நாட்டிலுள்ள பலரும் படித்து இராஜபக்தி கொண்டு ஒழுகுவார்களென இதனை இயற்றியோர் இராஜபக்திக்கு ஓர் அறிகுறியாக இதனை நம் ஐந்தாம் ஜார்ஜ் வேந்தர்க்கு ஸமர்ப்பித்து வெளியிட்டனர்.

திருவல்லிக்கேணி
22-12.

கா. ஸ்ரீ. கோபாலாசாரியார்.

ஸ்ரீ

# ஜார்ஜ் சக்கரவர்த்தியின் மகுடாபிஷேக மகோத்ஸவத்தில் பாடிய

# தசப்பிராதுர்ப்பவம்.

## காப்பு.

### வெண்பா

பார்பூத்துக் காக்கும் பதுமைகொழுநன்கடவுளார்
தாரபூத்த திண்புயசரி ஜார்ஜ மன்னனை—ஏர்பூத்த
பாமாலை யான்மொழிக்கப் பண்ணுறு சிறுவ னடான்
மாமாது கேள்வன் மகிழ்ந்து.

---

ஸ்ரீ

## நூல்.

பார்பூத்த மலர்பூத்த நாபிப் பரம்பரா
பரந்தபல மறைகளோதிப்
படைப்புரிமை பெறுமயன் றுயிலலும மறைகவர்
பரிக்கழுத் தோரகுமனை
ஏர்பூத்த பெருமசச மாய்க்கவி னுட்டொலைத்
தினிதினம் மறையயற்கீந்
தின்றமிழ்க் கோனையொரு மனுவாக்கி யருள்செய்த
வெழிலுருவி னெடியதிருமால்
நீர்பூத்த வுலகெலாம புகழவே சீர்த்திபொலி
நிலமீது காளுமோங்க
நிலவுபல வுயிர்களைச் செம்மை னளித்திங்கு
நெடிதுசெங் கோனடாத்தி
வார்பூத்த மார்த்தாண்ட னொளிமறைவி லாத்தேச
மன்னனென் பதுநிகழவே
வளர்தேச னளகேச னுளநேச முள ஜார்ஜு
மகராச னைக்காக்கவே. (1)

தளிர்திரைப் பாற்கடலி னடுவெண்மந் தரமத்து
நாட்டியர சுகியென்னுநீ
ளுரகக் கயிற்றினைப் பூட்டியம் மலைகவிழ
நழுவாது கீழிருந்தோர்
அளவிடற் கரியகச் சபமாய்ப் பரித்தமர
ரவுணருள் விராய்க்கடைந்திட்
டமுதாதி பல்வளனு மமரர்க் களித்தருள்செ
யாதியஞ் சோதிநெடுமால்
களிமறிக் கிருமுகத் தன்னைகுயின் மேரியிரு
கட்குவளை நன்மலர்க்கும்
கரமெடுத் தேத்துபிற மன்னருடு விற்குங்
கலாநிதிய மாகியென்றும
வளமிகுத் திடுபுலவ ருளமலர்க் கும்பரைகமை
வலியிருட் குமமிரவியாம்
வளர்தேச னளகேச னுளநேச முளஜார்ஜ
மகாராச னைக்காக்கவே. (2)

திண்புவியை முன்னமொரு கற்பத்து வெள்ளந்
திரண்டுமூ டிடலுமாழ்கித்
தேவர்முதல் யாவருமவி யாமலருள்கொண்டு
திகழ்பெரு வராகமாகித்
தண்புனலின் மண்ணினொடொரு கோரைக் கிழங்கினைத்
தான்பறித் தெழுதல்போலத்
தரணியை யிடந்தெழுத் தனதென வெதிர்ந்தவத்
தானவற் செற்றதிருமால்
நணபினொடு திருமாது புவிமாது மருவலா
னளிர்கடலி னடுவுறைதலான்
நன்குசெங் கோலானை யாழிகர மேந்தலா
னகுமகுட முடிசூடலான்
மண்புகழ்கொள் காவலை நடாவலா னெடியதிரு
மாலெனப் புகலவருசீர்
வளர்தேச னளகேச னுளநேச முளஜார்ஜ
மகாராச னைக்காக்கவே. (3)

முனமுலகெ லாந்தனடி தொழுதுதன் பெயரே
    மொழிந்திடக் கதிர்மதிவிதி
  முகிலூர்தி முதலான கடவுளர் பதங்கடன்
    மொய்ம்பிற் கவர்ந்தரியையும்
தினமும் பகைத்தவற் கன்பனு மைந்தனைத்
    தீங்கிழைத் திடுகனகனைத்
  திரணற மடங்கலாய் மார்பிடந் தேயவன்
    றிருமகற் கருள்செய் நெடுமால்
கனமுயரு நுஞ்சாதி குலமத வொழுக்கங்
    களுக்கொரிடை யூறின்றிநுங்
  கல்வியறி விற்குரிய பதமீது மோரங்
    கருத்திற் கொளாமலென்று
மனமுவந் துரைசெய்து முறைசெய்து மூதாட்டி
    வண்கோ ணடாவுதருமன்
  வளர்தேச னளகேச னுளநேச மூளஜார்ஜு
    மகராச னைக்காக்கவே. (4)

தேவர்கோ னுக்குரிய மூவுலக முந்தன்
    செருக்கிற் கவர்ந்தவசுர
  சேகரன் மாவலி மகத்தினிற் சென்றிரவு
    செயவெட்க மெய்தினன்போல்
தூவுடன் மிகக்குன்றி யாலமரும் வித்தினிற்
    றோன்றுகுற ளாய்ப்புவிதொளீஇத்
  தூயவர்த முதவியின் வளர்ந்தளந் திட்டபார்
    சுரர்பதிக் கீந்தநெடுமால்
பாவுசீர் ப்ரன்ஸ்விக் குலப்பாற் கடற்கண்வரு
    பண்புயரும் விக்டோரியாப்
  பணிலம் பரிந்தீன்ற எட்வார்டு மன்னனும்
    பருவிலைய முத்தமதனின்
மாவளங் கொளுநல்ல நீரெனக் கவிசன
    மதிக்கவரு பேரனாகும்
  வளர்தேச னளகேச னுளநேச மூளஜார்ஜு
    மகராச னைக்காக்கவே. (5)

கருதுங் தவங்கொண்ட சமதங்கி பணிகின்ற
காமதே னுக்கவர்ந்த
கார்த்தவீ ரியனையுயிர் பொக்கலு மவன்மைந்தர்
கடிதமுனி யைக்கொலத்தன்
அருமந்த தந்தையைக கொலைகண் டறங்கெடுத்
தவர்கள்வ ழிமூமெ ழுமுறை
அடியற விலக்கியிப் படியையமே லோர்க்கீந்த
வப்பரசு ராமநெடுமால்
தருமந் தலைக்கொண்ட மதிகுலத் தரசர்முன்
றுமாண்டு நீங்கடில்லித்
தலைநகரி வருதரும வள்ளலிவன் வெண்மையாற்
றண்மையாற் றன்மெபளவி
வருமின்சொ லமுதிறைற் கடலின்வர லாற்குறைவில்
வண்கலைகொண மதியமென்ன
வளர்தேச னளகேச னுளநேச முளஜார்ஜ
மகராச னைக்காக்கவே. (6)

மெய்யினை விடாதுதன் மெய்யைவிடு தயாதன்
விறறபுதல்வ னுகியிந்த
மேதினி துறந்துவன மீதினி னடந்துதவ
மேலவர்கள் விண்ணவர்க்குத்
துய்யமொழி தவறுது வெய்யவரை வீட்டியே
தொடுகட னிலம்புரந்த
தோன்றல்புகழ் சான்றசன கன்குலத் தோகைமகிழ்
தொடுவில்லி ராமனெனுமால்
ஐயனிவன் மகுடமணி பொழுதுவி கீர்த்தியா.
மங்கைக டாம்வரிப்ப
அவனிகைப் பற்றுமெனல் கீர்த்திமுன ரேகண்
டவற்றமுவி யதுதெரிப்பாள்
வையமுழு தும்படர்ந் தாளெனப் புலமைமிகு
வண்கவிஞர் கூற்நாளும்
வளர்தேச னளகேச னுளநேச முளஜார்ஜ
மகராச னைக்காக்கவே. (7)

முன்னமது ராநகரி தன்னின்வரு கண்ணனவன்
முன்னவ னெனத்தோன்றியே
முடுகியெழும் யமுனையை யிழுத்தனன் துவிதனை
முடித்தன னலப்படையினான்
தன்னரு மகற்சிறைசெய் துன்னலரை வென்றவன்
றன்விறையு மான்விழியை யச
சாம்பன்மனை யாம்படிசெய் குவளைவண னரணன்
றவளவண ராமனெனுமால்
அன்னைவிக் டோரியா வென்னைமிக வாதரித்
தாண்டனள் பல் லாண்டெட்வர்டின்
அரசுசில நாட்செல்ல நீயெனிட மேவியரி
யணையிரீஇ யென்மகார்க்கு
மன்னுபல மதிமொழிந் திடவருதி யெனவிந்து
மாதுசொல வருகிறான்போன்ம்
வளர்தேச னளகேச னுளநேச முளஜார்ஜ
மகராச னைக்காக்கவே. (8)

பண்ணினுயர் மண்ணினுறு பாரமது தீரவரு
பாண்டவரை யாண்டபரமன்
பாரதப் போரினிற் றேரினிற் கீதையைப்
பார்த்தனுக் கீத்தருள்செய்தான்
கண்ணிலே மகார்களென வெண்ணுமொரு நூறு பெயர்
கண்ணுறுயர் நண்ணுசபையின்
கண்ணனிய பெண்ணையருள் பண்ணினந மண்ணனுடா
கண்ணன் மணி வண்ணனெனுமால்
கண்ணையிமை போற்காவல் பண்ணுமிவ னாட்டினிற்
கற்பெனும் பொற்புடையபெண்
கலங்காம லாண்கண்முன் விலங்காது செல்லாவ
கல்விபெறு நல்வினையினான்
மண்ணின்மிசை யெண்ணுபய னண்ணலா மெய்ம்மையோன்
வானஞ்சய வாளனெனவே
வளர்தேச னளகேச னுளநேச முளஜார்ஜ
மகராச னைக்காக்கவே. (9)

இந்நில மீதாகும் முந்தைமறை நூல்பல
வியம்பற வொழுக்கம்யாவும்
எல்லாரு நன்குணர்ந் திறைவனடி மறவாம
லென்றென்று நன்றொழுகவும
தந்தமர சர்க்கன்பு கொண்டினிது வாழவுந்
தன்மங்க டாம்வளரவும்
தவனவான் பரியிவர்ந் தொருவீர ஜயினித்
தரணிவரு கற்கியெனுமால்
இந்தியரு மாங்கிலரு மென்றுநண் பின்வளர
இங்கிலீ ஷரசுநாளும்
இனிதோங்க நற்கலவி செல்வமிக வச்சமொன்
றின்றியா நன்றுவாழ
வந்திடுக மிந்தசக கரவர்த்தி தேவியொடு
வாழ்ந்திடுக வாழ்ந்திடவென
வளர்தேச னனேகச னுளநேச முளஜார்ஜ
மகராச னைக்காக்கவே (10)

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 1 | ப்ரதிவீ | ப்ருதிவீ |
| | 19 | பாட்டுதகலைா | பாட்டுடைதசலைா |
| பாட்டு 1 | 11 | செமமைமணி | சொல மயினணி |
| 7 | 14 | கூற் | கூற |
| 9 | 11 | செல்வாக | செலவவாக |
| | 13 | யொல | யொள் |

The accompanying pictures were personally seen and admired by Their Excellencies Lord and Lady Carmichel

The Chief Secretary to the Government His Excellency's Private Secretary The Registrar of the High Court and others like The Hon'ble Sir Murray Hammick highly appreciated the pictorial verses and the late lamented The Hon'ble Mr. V. Krishnasawmi Iyer C. I. E was greatly moved to admiration when the poems were read and explained to him by our Pandit, the author

Copies, have also now been sent to the Oriental Societies in London, Paris and Germany.

The first edition Published by our Pandit did not reach a wide public and hence this edition

Errors in the pictures can be corected by reference to the verses below them.

THE STUDENTS.

ஸ்ரீ

## சித்திரகவிகளின் குறிப்புரை.

### கமலபந்தம்

(1) மேவுசார்ஜ-பெருமைபொருந்திய ஜார்ஜ் மன்னர், தூமேவு-பரிசுத்தி பொருந்திய முடிமேவும்-மகுடத்தை அணிவார்; அளிதூவும்-கருணையைப் பொழிவார்; மேவு-அன்புள்ள, மேசரின்-திருமகள் தலைவர்போல, (அல்லது) மே-அன்புள்ள, உமேசரின்-பார்வதி நாதர்போல, ஏவும்-ஆஞ்ஞை செய்வார்; (ஆகவே) சாவுமே-ஜனங்களுக்குப் புகலிடமும், மே உன்-பக்தியோடு நினைக்கப்படுகிற, ஏர் ஒளி—(அவரது) அழகிய ஒளியேயாம். [ஒளி-அரசன் தன்னிடத்திருக்கவும் பக்தியும் பயமுமுடையராய் மக்கள் ஒழுகுதற்கு ஏதுவாகிய பெருமை. சேர் ஒளியுமாம்]

### இரதபந்தம்.

(2) காந்தர்ப்ப சுந்தரராஜா-கந்தர்வன்போல (அல்லது) மன்மதன்போல அழகுள்ள (நம்) அரசர், நமை உட்கலந்து நம்மோடு மனதிலொன்றுபட்டு, காத்து—பலரும் நாதன் வரல் நாடி-பலரும் அரசர் இந்தியாவிற்கு வருதலை விரும்பி, நன்கு பூஜித்து ஓதவே-நன்றாக உபசரிகதுப் புகழ, மேதினிகாப்ப-இப்பூமியைக் காத்தலால, வேதவழிவாழும்-வேதவொழுக்கங்கள் வாழ்வடையும்; (ஆகவே) வேந்து ஜார்ஜ் இன்பம் மேவு-ஜ்யார்ஜ் அரசர் சுகங்களை அடைவாராக.

### இரதசக்கரபந்தம்—க.

ஜார்ஜ் பாரும் மேவும்-ஜ்யார்ஜரசர் இப்பூமியையும் கைக்கொள்வார்; மேரு-மகாமேரு பர்வதம்போல (ஸ்திரமாக), பாகு ஆயு-தோளாரத்தையும் வாழ்நாளையும், மேவும்-அடைவார்; மேவு-ஒருவரையொருவர் நேசிக்கின்ற, மேச ஆணை-திருமகள் தலைவராகிய திருமாலின் அதிகாரத்தை, மேவும்-செலுத்துவார்; மேவு-நம்மீது அமைந்த பா ஈது-இசசெய்யுளை, மேவும்-அங்கீகரிப்பார். [மே உமேச ஆணை எனப் பிரித்து விருப்பமுள்ள பார்வதி நாதருடைய அதிகாரம் எனவுமாம்]

### இரத சக்கரபந்தம்—உ.

வானம் மானுகோ-(ஈகையில்) மேகத்தையொத்த அரசரே! வான்-தேவர்களும், அவாவான-விரும்பத்தக்க, ஆகாரம் ரூபத்தையுடைய, மீனகோ-மன்மதன்போல்பவரே! வானம்மீது உறு-ஸ்வர்க்கத்திலுள்ள, கானவா-கற்பு

கச்சோலைக்கதிபனான இந்திரனை யொப்பவரே! (அல்லது) வானம்மீது ஸ்வர்க்கத்தின் மேலுஞ்சென்றுள்ள, கானவா-புகழ்ப்பாட்டை யுடையவரே வான்நகா-பெரியபூமியை யுடையவரே! ஜார்ஜூமானவா-ஜார்ஜ் என்னும் நர! சிரேஷ்டரே!

[மாலைகளிலுள்ளவை விளங்கிக்கிடந்தன.]

## சக்கரபந்தம்

(3) பொன்முடிதாங்கிய நமகோ-ஸ்வர்ண கிரீடந் தரித்த நமது அரசர்; போற்றுநாக்கு கனுதாரன-தம்மை வழிபட்டொழுகுவாருக்குப் பெருமைக்கு ஆதாரமாயிருப்பவர்; நன்மனம் கொணடவன், ஜனஙகளிடத்து நல்லமனதையுடையவா; பாகு அழி இனசொலன்-வெல்லப்பாகும் தோற்கும்படியான இனிய சொல்லையுடைவா; ஞாயம் உள்ள மன்-நியாயமுள்ள அரசர்; மகா ஜாராஜ் வேள்-மேன்மை பொருந்திய ஜ்யார்ஜரசர், நூல் அகம் வாக்கு உளன்-நூல்களினிடத்துச சென்ற வாக்குடையவர்; வந்து—, இந்தியா பொன்னினை ஆணடு-இநதியாவாகிய பெண்ணை ஆண்டு, வளத்துக்குள் பொம்ம-செல்வததில மிகுவாராக; புகழ் நணண-புகழை அடைவாராக.

## மகுடபந்தம்.

(4) பந்தம்-அழகு பொருந்திய (அலலது) பிறரை ஸ்வாதீனப் படுத்தற்குரிய, மாமதியா-சிறந்த அறிவையுடையவரே! கந்தவேளே-(அழகிலும் ஆண்மையிலும்) முருகக்கடவுளை யொப்பவரே! முகவிஜய-முகத்தில்வெற்றிக்குறியுள்ளவரே! முள் எய்-முள்ளை யொத்த, பகைகடிவோய்-சத்துருக்களை ஒழிப்பவரே! கேள்-இதனைக் கேட்பீராக; இந்து ராஜாவாஅ-இந்து சக்கரவர்த்தியாக. ஆர்வம் தோய-உமது அருள் எம்மிடம் தங்கும்படி, (அல்லது) எமது இராஜபக்தி உம்மிடம் தங்கும்படி நேர்வந்தருள்-எம் முன்பு வருவீராக.

## ஸூதண்ட பந்தம்.

(5) தே-தெய்வத்தன்மை பொருந்திய,மா நீதிபதி-சிறந்த நீதிபதியாகிய, ஜார்ஜாதிய-ஜார்ஜரசரே!மரு-வாசனைபொருந்திய, தரில-மாலையணிந்த, அம்ஆக-அழகிய மார்பையுடையவரே! கோலகோல-அழகிய செங்கோலையுடையவரே! பால-(உயிர்களைக்) காப்பவரே! மேல மேன்மையுடையவரே! கோ-பூமிக்கு, சம்-குளிர்ச்சியான, மாஅலரி-சிறந்த சூரியனையொத்த, தருமபதி-தருமததுக்குத் தலைவரே! ஜார்ஜாதிபதி—! நீ—, மாதே-திருமகளுக்குத் தலைவனான திருமாலாகின்றீர். (ஸூதண்டம்-செங்கோல்.)

(கொலக்கோல எனற்பாலது கொகுத்தலாயிற்று.)

நான்கிதழ்க் கமலபந்தம்—THE LOTUS-POEM.

## வஞ்சி விருத்தம்.

மேவு சார்ஜனி தூவுமே
மேவு தூமுடி மேவுமே
மேவு மேசரி னேவுமே
மேவு னேரொளி சார்வுமே.




குறிப்பு:— இதன்கண் 'சார்ஜ்' என்பதன் ரகரமெய் சகர ஆகாரத்தைச் சார்ந்து இரண்டும் ஓரெழுத்துப்போல வந்தன. (1)

(5806)

## இரதபந்தம் — THE CAR-POEM

நேரிசை

வேதவழி வாழுமே
நாதன்வர ஞூடியே
காந்தர்ப்ப சுந்தரரா
வேந்துஜா ஜின்ப

குறிப்பு.—இது கீழிருந்து மேலேறி மேலிருந்து நடுவெழுத்துகளால கீழிறங்குவது.

வெண்பா.

மேதினிகாப் பப்பலரும்
நன்குபூஜித்—தோதவேதான்
ஜாநகைகாத துட்கலந்து
மேவு வே.




இரத சக்கரபந்தம் — THE WHIL-POEM.

வஞ்சி விருத்தம்

மேவு மேஜார்ஜு பாருமே
மேரு பாகாபு மேவுமே
மேவு மேசாணை பாவுமே
மேவு பாவீது மேவமே.

ான மாஜுநீசோ வாகவா
ான வாகார மீனவா
ான மீதுறு காணவா
ான காஜார்ஜு மானவா

குறிப்பு.

இவற்றுள் ஒவ்வொன்றும் தேரின் ஒவ்வொரு சககரத்திலுள்ளது.

## ஆறாரைச் சக்கரபந்தம்-- THE DISC-POEM.



### கட்டளைக் கலித்துறை.

பொன்முடி தாங்கிய நங்கோ கருணைதான் போற்றுநர்க்கு
நன்மனங் கொண்டவன் பாகதி யிற்சொலன் ஞாயமுள்ள
மன்மகா ஜார்ஜைந்தாமவன் ஞாலக வாக்கனன் வந்திந்தியா
பொன்னினை யாண்டு வளத்துக்கட் பொம்ம புகழ்நண்ணவே.

குறிப்பு:—இதன் குடத்திலுள்ள எழுத்துக்களை வட்டமாகப் படிக்க, "கோபாலையர்" என வந்தது ஆரைச் சக்கரம் (3)

## மகுடபந்தம — THE CROWN-POEM.




குறிப்பு:—இது நம் ஜார்ஜ சக்கரவர்த்தியவர்கள் தரித்துள்ள மகுடத்தின் வடிவுடையதாகக் கொள்க. இதன் அடிப்பட்டத்து ஒன்பதெழுத்துக்களில் நடுவெழுத்தையும், வலப்பட்டத்து ஐந்தாவது எழுத்தையும், மேற் சிலுவையின் தலை உடல் கால் இவற்றிலுள்ள எழுத்துக்களையும், இடப்பட்டத்து ஐந்தாவது எழுத்தையும் முறையே கூட்டிப் படிக்க 'ஜாரஜகமுடி' எனவும், நடுப்பட்டத்தில் கீழிருந்து ஆறெழுத்துக்களைக் கூட்டிப் படிக்க, 'பந்தமாமதி' எனவும் வந்தமை காண்க. எனவே, 'ஜார்ஜக முடி பந்தமாமதி' என்றவாறும். (4)

அகவற்பா.

தேமா நீதி பதிஜார் ஜாதிப்
மருத்தரில வமாககோ லகோல பால
மேல கோகமா வலரித் தரும
பதிஜாா ஜாதி பதிநீ மாதே.




குறிப்பு:—இதனுடலில் 'ஜார்ஜ்' என்பதும், மேற் சிலுவையில் 'கோல்' என்பதும். ஆக்கியோர் பெயராகிய 'கோபால' என்பதும் வந்தமை காண்க. ஜார் ஜாதிப-நீட்டல். "மருத்தரில" என்பதன் தகரமெய்யும் தகர அகரமும் மீளுங்கால் மாறி நின்றன. (5.)